28738

OL/2016/48-T(NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

48 T

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2016**

දෙමළ සාහිත්‍ය රසාස්වාදය
**தமிழ் இலக்கிய நயம்**
Appreciation of Tamil Literary Texts

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

※ பகுதி **I** இல் **1, 2** ஆகிய **இரு** வினாக்களுக்கும் பகுதி **II** இலுள்ள **3**ஆம் வினாவுக்கும் பகுதி **III** இலுள்ள **4, 5, 6, 7** ஆகிய வினாக்களுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கும் (எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு) விடை தருக.

## பகுதி I

**1.** (i) தொடக்கம் (v) வரையுள்ள வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) "ஏர்குலாம் முகத்தினாளை இறைமுகம் எடுத்துநோக்கி
தார்குலாம் அலங்கல் மார்பன் தாயரை நினைந்து நைந்தான்"

(அ) இங்கு 'அலங்கல் மார்பன்' யார்?

(ஆ) 'ஏர்குலாம் முகத்தினாள்' யார்?

(ii) "பாதி வழிவந்து தாமரைக் கை தந்த
பச்சை அமுதமையா"

(அ) இப்பாடற் பகுதியில் இடம்பெற்றுள்ள அணியினை இனங்கண்டு விளக்குக.

(ஆ) இங்கு, மனைவியின் அன்புள்ளம் எவ்வாறு வெளிப்படுத்தப்பட்டுள்ளது?

(iii) "குஞ்சியாச்சி வாழ குஞ்சியப்பு வாழ"

(அ) குஞ்சியாச்சி

(ஆ) குஞ்சியப்பு

என்பவற்றுக்கு நிகராகத் தமிழில் வழங்கும் வேறு உறவுமுறைப்பெயர் ஒவ்வொன்று தருக.

(iv) பின்வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்திலுள்ள சொற்களை விளக்குக.

(அ) மனிதன் ஒரு **சமூக விலங்கு**.

(ஆ) என்னைப் **புனரமைக்கும்** முயற்சியில் முழுமையாக இறங்கினேன்.

(v) "ஒன்றென்ன இரண்டையுமே எடுத்துச் செல்லுங்கள். உங்களுக்கு இல்லாததா?" - இக்கூற்று,

(அ) யாரால்

(ஆ) யாருக்குக் கூறப்பெற்றது?

(4 x 5 = 20 புள்ளிகள்)

**2.** கீழ்க்காணும் பாடற்பகுதியை வாசித்து, தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

தனித்தமைந்த வீட்டில் புத்தகமும் நானும்
சையோகம் புரிந்ததொரு வேளைதன்னில்,
இனித்தபுவி இயற்கையெழில் எல்லாம் கண்டேன்;
இசைகேட்டேன்! மணம்மோந்தேன்! சுவைகள் உண்டேன்!
மனிதரிலே மிக்குயர்ந்த கவிஞர் நெஞ்சின்
மகாசோதியிற் கலந்த தெனது நெஞ்சம்!
சனித்ததங்கே புத்துணர்வு! புத்தகங்கள்
தருமுதவி பெரிது! மிகப்பெரிது கண்டீர்!

மனிதரெலாம் அன்புநெறி காண்பதற்கும்
        மனோபாவம் வானைப்போல் விரிவடைந்து
தனிமனித தத்துவமாம் இருளைப் போக்கிச்
        சகமக்கள் ஒன்றென்ப துணர்வதற்கும்,
இனிதினிதாய் எழுந்த உயர் எண்ணமெல்லாம்
        இலகுவது புலவர்தரு சுவடிச்சாலை;
புனிதமுற்று மக்கள் புது வாழ்வுவேண்டில்
        புத்தகசாலை வேண்டும் நாட்டில் யாண்டும்.

(i) கவிஞரின் மனமொன்றிய புத்தக வாசிப்பை வெளிப்படுத்தி நிற்கும் தொடர் யாது?

(ii) புத்தக வாசிப்பில் கவிஞர் பெற்ற அனுபவம் எவ்வாறு விவரிக்கப்படுகிறது?

(iii) இங்கு கையாளப்பெற்றுள்ள உவமை அணியை இனங்கண்டு விளக்குக.

(iv) இருளாக உருவகிக்கப்பட்டிருப்பது யாது?

(v) 'மகா சோதியில் கலந்தது எனது நெஞ்சம்' என்னும் தொடரில் நீர் காணும் நயத்தை விவரிக்குக.

(5 x 5 = 25 புள்ளிகள்)

## பகுதி II

**3.** கீழ்க்காணும் உரைப்பகுதியினை வாசித்து, தரப்பெற்றுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

உரிமைக்கும் கடமைக்கும் இடையே உள்ள ஏற்றத்தாழ்வை நீக்குவதற்காக இயற்கை அமைத்த ஓர் அருமையான பாதுகாப்பே அன்பு எனப்படுவது. அன்பு எங்கே உயர்ந்து விளங்குகின்றதோ, அங்கே உரிமைப் போராட்டம் இல்லை; கடமைக் குறைவு இல்லை. அதனால் "அன்பின் வழியது உயிர்நிலை" என்கிறார் திருவள்ளுவர். அன்பு இல்லாத வாழ்க்கை பாலை நிலத்தில் உள்ள பட்டமரம் போன்றது என்றும் கூறுகின்றார். அதனால் குடும்பத்தில் அன்பு ஆட்சி செய்ய வேண்டும் என்று முன்னோர்கள் ஏற்படுத்தினார்கள். இல்வாழ்க்கையை ஓர் அறம் என்று சிறப்பித்து, இல்லறம் என்றார்கள். மக்கட் பேறு, சுற்றம் தழுவுதல் முதலியவற்றை அதன் அங்கம் ஆக்கினார்கள். தேசபக்தி என்று அமைந்த அன்பு அப்படியே நாடு என்ற பெரிய குடும்பத்தைப் போற்றி வளர்ப்பதற்கு ஏற்பட்டதாகும். சமயம் அல்லது கடவுள் நெறி என்பதும், உலகத்தில் வாழும் எல்லோரிடமும் அன்பு செலுத்தி, உலகத்தையே கடவுளின் குடும்பம் என்று கருதும் பரந்த நோக்கத்தை வளர்ப்பதற்கு ஏற்பட்டதாகும்.

ஆனால், குடும்பத்தில் தாய் செலுத்தும் அன்பைத் தவறாகப் பயன்படுத்திக் கொண்டு தந்தையோ மக்களோ தன்னலம் உடையவர்களாய்த் தீமை செய்வார்களானால் என்ன ஆகும்? அப்படித்தான், நாட்டில் ஒரு சாராரின் அன்பைத் தவறாகப் பயன்படுத்திக் கொண்டு மற்றொரு சாரார் தன்னலமாக வாழ்வார்களானால், அன்பு வரண்டு போகும். உரிமைக்கும் கடமைக்கும் போராட்டம் ஏற்படும்.

(i) ஆசிரியரின் நோக்கில் அன்பு எனப்படுவது யாது?

(ii) அன்பின் முக்கியத்துவத்தை வலியுறுத்த, கையாளப்பெற்றுள்ள திருக்குறட் கருத்துக்கள் எவை?

(iii) தேசபக்தியின் பயன் யாது?

(iv) சமயநெறி ஏன் ஏற்பட்டதென ஆசிரியர் கருதுகின்றார்?

(v) ஒரு நாட்டில் உரிமைக்கும் கடமைக்கும் எப்பொழுது போராட்டம் ஏற்படும்?

(5 x 5 = 25 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

## பகுதி III

- எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கு விடை எழுதுக.

4. **முளிதயிர் பிசைந்த....** எனும் செய்யுளில், தலைவன் தலைவியரின் பரஸ்பர அன்புணர்வு வெளிப்படுமாற்றை விவரிக்குக.

5. **எலியம்** என்ற சிறுகதையின் அங்கதப் பாங்கை எடுத்துரைக்குக.

6. **புகழ்வேட்டை** என்ற கட்டுரையை அடிப்படையாகக் கொண்டு,
   (i) மூவேந்தர்கள்
   (ii) கடையெழு வள்ளல்கள்
   ஆகியோர் புகழ் ஈட்டுவதற்குக் கையாண்ட வழிகளை விளக்குக.

7. **புதுமைப் பெண்ணாய் மாறிடுவோம்** எனும் கவிதையில்,
   (i) தோட்டத் தொழிலாளப் பெண்கள் அனுபவித்த அடக்குமுறைகள்
   (ii) அவர்களின் விடுதலை வேட்கை
   என்பன வெளிப்படுமாற்றை விளக்குக. (15 x 2 = 30 புள்ளிகள்)

***


Department of Examinations, Sri Lanka.

